# பிரார்த்தனைப் பாடல்கள்








ஸ்ரீ அவினாசிலிங்கம் டிரஸ்ட் கல்வி ஸ்தாபனங்கள்
கோயமுத்தூர் - 11

# பிரார்த்தனைப் பாடல்கள்







ஸ்ரீ அவினாசிலிங்கம் டிரஸ்ட் கல்வி ஸ்தாபனங்கள்
கோயமுத்தூர்-11

# முகவுரை

எங்கள் சின்னையா ஸ்ரீ தி. சு. தண்டபாணி செட்டியாருக்கு 60 – வது வயது இவ்வாண்டு அக்டோபர் மாதம் 2 – ம் தேதியன்று பூர்த்தியாகிறது. அதன் ஞாபகார்த்தமாக இப்பக்திப் பாடல் புத்தகம் வெளியிடப் படுகிறது.

அவர்கள் தூய்மையான உள்ளமும், பக்தியும், உதார குணமும் பாராட்டுதற்கு உரியன. குழந்தைகள் பால் நிறைந்த அன்பு உள்ளவர்கள். இறைவனை இறைஞ்சும் இப்பாடல்கள் அவர் தூய்மைக்கும், பக்திக்கும் பொருந்தினவையாகும். இறைவன் அருளால் அவர் நெடு நாள் வாழ்ந்து நாட்டிற்குச் சேவை செய்து இன்புறப் பிரார்த்திக்கின்றோம்.

இப்புத்தகம் எங்கள் ஸ்தாபனங்களில் உள்ள ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் பெரிதும் பயன்படுமென்று நம்புகிறோம்.

ஸ்ரீ அவினாசிலிங்கம்<br>
கல்வி நிலையங்கள்,<br>
கோவை – 11.<br>
2—10—66

இராஜம்மாள் பா. தேவதாஸ்<br>
டைரக்டர்.

## ஸ்ரீ ராமகிருஷ்ண தோத்திரம்

ओं ह्रीं ऋतं त्वमचलो गुणजित् गुणेड्यः
नक्तं दिवं सकरुणं तव पादपद्मम् ।
मोहंकषं बहुकृतं न भजे यतोऽहं
तस्मात् त्वमेव शरणं मम दीनबन्धो ॥ १ ॥

ஓம் ஹ்ரீம் ரிதம் த்வமசலோ குணஜித் குணேட்ய:
நக்தம் திவம் ஸகருணம் தவ பாத பத்மம் |
மோஹங்கஷம் பஹுக்ருதம் ந பஜே யதோஹம்
தஸ்மாத் த்வமேவ சரணம் மம தீனபந்தோ || 1 ||

भक्तिर्भगश्च भजनं भवभेदकारि
गच्छन्त्यलं सुविपुलं गमनाय तत्त्वम् ।
वक्त्रोद्धृतं तु हृदि मे न विभाति किञ्चित्
तस्मात् त्वमेव शरणं मम दीनबन्धो ॥ २ ॥

பக்திர்பகஸ்ச பஜனம் பவபேதகாரி
கச்சந்த்யலம் ஸுவிபுலம் கமனாய தத்வம் |
வக்த்ரோத்த்ருதம் து ஹ்ருதி மே ந விபாதி கிஞ்சித்
தஸ்மாத் த்வமேவ சரணம் மம தீனபந்தோ || 2 ||

तेजस्तरन्ति तरसा त्वयि तृप्ततृष्णाः
रागेकृते ऋतपथे त्वयि रामकृष्णे ।
मर्त्यामृतं तव पदं मरणोर्मिनाशं
तस्मात् त्वमेव शरणं मम दीनबन्धो ॥ ३॥

தேஜஸ்தரந்தி தரஸா த்வயி த்ருப்தத்ருஷ்ணா:
ராகே க்ருதே ரிதபதே த்வயி ராமகிருஷ்ணே!
மர்த்யாம்ருதம் தவ பதம் மரணோர்மிநாசம்
தஸ்மாத் த்வமேவ சரணம் மம தீனபந்தோ ॥ 3 ॥

कृत्यं करोति कलुषं कुहकान्तकारि
ष्णान्तं शिवं सुविमलं तव नाम नाथ ।
यस्मादहं त्वशरणो जगदेकगम्य
तस्मात् त्वमेव शरणं मम दीनबन्धो ॥ ४ ॥

க்ருத்யம் கரோதி கலுஷம் குஹகாந்தகாரி
ஷ்ணாந்தம் சிவம் ஸுவிமலம் தவ நாம நாத!
யஸ்மாதஹம் த்வசரணோ ஜகதேககம்ய
தஸ்மாத் த்வமேவ சரணம் மம தீனபந்தோ ॥ 4 ॥

ओं स्थापकाय च धर्मस्य सर्वधर्मस्वरूपिणे
अवतारवरिष्ठाय रामकृष्णाय ते नमः ॥

ஓம் ஸ்தாபகாயச தர்மஸ்ய ஸர்வதர்ம ஸ்வரூபிணே
அவதாரவரிஷ்டாய ராமகிருஷ்ணய தே நம: ॥

— சுவாமி விவேகானந்தர்

## அன்னை தோத்திரம்

सर्वमंगल मांगल्ये शिवे सर्वार्थ साधिके ।
शरण्ये त्र्यंबके गौरि नारायणि नमोऽस्तु ते ॥ १ ॥

ஸர்வ மங்கள மாங்கல்யே சிவே சர்வார்த்த ஸாதிகே
சரண்யே த்ரயம்பகே கௌரி நாராயணி நமோஸ்துதே
॥ 1 ॥

सृष्टिस्थितिविनाशानां शक्तिभूते सनातनि ।
गुणाश्रये गुणमये नारायणि नमोऽस्तु ते ॥ २ ॥

ஸ்ருஷ்டிஸ்திதி விநாசானாம் சக்திபூதே ஸநாதனி
குணாச்ரயே குணமயே நாராயணி நமோஸ்துதே ॥ 2 ॥

शरणागत दीनार्त परित्राण परायणे ।
सर्वस्यार्तिहरे देवि नारायणि नमोऽस्तु ते ॥ ३ ॥

சரணாகத தீனார்த்த பரித்ராண பராயணே
ஸர்வஸ்யார்த்திஹரே தேவி நாராயணி நமோஸ்துதே ॥ 3 ॥

— ஸப்தஸதி

असतो मा सत् गमय।
तमसो मा ज्योतिर्गमय ।
मृत्योर्माऽमृतं गमय ॥

அஸதோ மா ஸத்கமய
தமஸோ மா ஜ்யோதிர்கமய
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய.

— பிரஹதாரண்யக உபநிஷத்

त्वमेव माता च पिता त्वमेव
त्वमेव बन्धुश्च सखा त्वमेव।
त्वमेव विद्या द्रविणं त्वमेव
त्वमेव सर्वं मम देवदेव ॥

த்வமேவ மாதாச பிதா த்வமேவ
த்வமேவ பந்துஸ்ச ஸகா த்வமேவ
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவதேவ.

— பிரபன்ன கீதை

ओं सहनाववतु सह नौ भुनक्तु सहवीर्यं करवावहै।
तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै॥

ஓம் ஸஹநாவவது ஸஹநௌ புனக்து
ஸஹவீர்யம் கரவாவஹை
தேஜஸ்வி நாவதீதமஸ்து மாவித்விஷாவஹை ॥

— கட உபநிஷத்

अहिंसा सत्य अस्तेय ब्रह्मचर्य असंग्रह
शरीरश्रम अस्वाद सर्वत्र भयवर्जना।
सर्वधर्मी समानत्व स्वदेशी स्पर्शभावना
हीं एकादश सेवावीं नम्रत्वे व्रत निश्चये॥

அஹிம்ஸா ஸத்ய அஸ்தேய ப்ரஹ்மசர்ய அஸங்ரஹ
சரீரச்ரம அஸவாத ஸர்வத்ர பயவர்ஜனு
ஸர்வதர்மீ ஸமாநத்வ ஸ்வதேசீ ஸ்பர்ச பாவநா
ஹீம் ஏகாதச ஸேவாவீம் நம்ரத்வே வ்ரத நிச்சயே ॥

## ஸ்திதப்ரக்ஞன் (கீதை)

அர்ச்சுனன் சொன்னன்:—

புரியும் நிட்டை தனில்நிலைத்த
புந்தி யுடையோர் இலக்கணமென் ?
திறமாம் மதியோன் எவ்வாறு
செல்வான் இருப்பான் உரைப்பானே.

பகவான் கூற்று:—

துயரம் வந்தால் மனத்துடிப்பும்
சுகத்தில் களிப்பும் இலனுகி
பயமும் விருப்பும் சினமுமிலான்
பகரப் படுவான் ஞானியென

அனைத்தாம் உறுப்பை யுள்ளிழுக்கும்
ஆமை போலெப் பொருளினின்றும்
அனைத்தாம் புலனை உள்ளிழுக்கும்
அவர்க்கே ஞானம் நிலைத்திடுமே

பொருளை மேன்மேல் சிந்திக்கும்
புருடற் கவற்றில் பற்றுண்டாம்
விருப்பம் பற்ருல் உண்டாகும்
விருப்பால் கோபம் உண்டாமே

## (ஸ்திதப்ரக்ஞன் — தொடர்ச்சி)

முறையே சினத்தால் மோகமுண்டாம்
மோகத்தாலே மறதி யுண்டாம்
மறதியாலே மதி நாசம்
மதி நாசத்தால் அழிவானே

மனதைத் தனது வசஞ்செய்த
மனிதன் விருப்பு வெறுப்பின்றித்
தனது புலனல் பொருள் நுகர்ந்தும்
சலியாச் சாந்தம் அடைவானே

அமைதி யாலே துக்க மெல்லாம்
அவற்கிங் கொழியும் ஏனெனிலோ
அமைதி யுடைய மனத்தோற்கே
அறிவு விரைவில் நிலைத்திடுமே

அனைத்தாம் ஆசைகளை மாய்த்தே
அகத்தில் எந்தப் பற்றுமின்றி
எனது நானெனும் செருக்கின்றி
இருப்போன் சாந்தம் அடைவானே

இதுவே பிரம்ம நிலையாகும்
இதனை அடைந்தோன் மோகமுறுன்
இதிலே இறக்கும் பொழுதேனும்
இருப்போ னடைவான் நிர்வாணம்.

மொழி பெயர்ப்பு:— அ. இராமசாமி

வகுளாபரணம்

ஆதி

பல்லவி

சரஸ்வதி தாயே — கோரும்
வரமருள் வாயே அம்பா (சரஸ்)

சரணம்

வித்யாலயமதில் விளங்கு நற் சுடரே
நித்யானந்த நிர்மல தேவி (சரஸ்)

கல்வியின் கரையே கலைகளின் வரையே
கற்பக மணியாய் கலையருள்புரிவாய் (சரஸ்)

வீணையின் இசையும் விரும்பு நற்கவியும்
வாணியுன் அருளே வாழ்கநீ என்றும் (சரஸ்)

— ம. ப. பெரியசாமி

## விருத்தம்

தந்தை தாயும்நீ என்னுயிர்த் துணையும்நீ
சஞ்சலம் அதுதீர்க்க
வந்த தேசிக வடிவும்நீ உனையலால்
மற்றொரு துணைகாணேன்
அந்தம் ஆதியும் அளப்பரும் ஜோதியே
ஆதியே அடியார்தம்
சிந்தை மேவிய ஸ்ரீ ராமகிருஷ்ணராம்
அருள் உறை பெருமானே.

காந்தாரம்

ரூபகம்

மா தர்ப் பிறைக்கண்ணி யானை
 மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப்
 புகுவா ரவர்பின் புகுவேன்
யா தும் சுவடு படாமல்
 ஐயா றடைகின்ற போ து
கா தல் மடப்பிடி யோடும்
 களிறு வருவன கண்டேன்
கண்டே னவர் திருப் பா தம்
 கண்டறி யா தன கண்டேன்.

— அப்பர்

## விருத்தம்

நாமார்க்கும் குடிஅல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணிஅறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடி அல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழைஓர் காதிற்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.

— அப்பர்

காந்தாரம்

ரூபகம்

சுண்ணவெண் சந்தனச் சாந்தும்
சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண உரிவை யுடையும்
வளரும் பவள நிறமும்
அண்ணல் அரண்முர ணேறும்
அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும்
உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை
அஞ்ச வருவதும் இல்லை.

— அப்பர்



வானம் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானம் துளங்கித் தலைதடுமா றிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலை நஞ்சுண்டு
ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கே.

— அப்பர்

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.



பெருக லாந்தவம் பேதமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருந்தலாம்
பருக லாம்பர மாயதோர் ஆனந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே.

— அப்பர்

## விருத்தம்

நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
　　நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
　　பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
　　சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதீ யென்றும்
　　ஆரூரா வென்றென்றே யலறா நில்லே.

— அப்பர்

காந்தாரப் பஞ்சமம்

ரூபகம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

— அப்பர்

நட்ட பாடை

ஆதி

தோடுடைய செவியன் விடையேறியோர்
தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடிபூசியென்
உள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான்முனை நாட்பணிந்து
ஏத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய
பெம்மானிவனன்றே.

— திருஞானசம்பந்தர்



## பியந்தைக் காந்தாரம்

சாபு

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே.

— திருஞானசம்பந்தர்

பியந்தைக் காந்தாரம்

ஆதி

எந்தை யீசனெம் பெருமான்
ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால்
சென்றுகை கூடுவ தன்றால்
கந்தமா மலருந்திக் கடும் புனல்
நிவா மல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல் வாயில்
அரத்துறை யடிகள்தம் அருளே.

— திருஞானசம்பந்தர்

## கொல்லிக் கௌவாணம்

கண்டஜாதி ஏகம்

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆருரன் ஆரூரில் அம்மானுக் காளே.

— சுந்தரர்

**இந்தளம்**

**ரூபகம்**

பித்தாபிறை சூடிபெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
அத்தா உனக் காளயினி அல்லேன் எனலாமே.

ஊனாய் உயிரானாய் உடலானாய் உலகானாய்
வானாய் நிலனானாய் கடலானாய் மலையானாய்
தேனார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
ஆனாய் உனக் காளாயினி அல்லேன் எனலாமே.

— சுந்தரர்

நட்டராகம்

ரூபகம்

பொன்னார் மேனியனே புலித்
தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடை மேல்மிளிர்
கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ
பாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னை யல்லால்
இனியாரை நினைக்கேனே.

—சுந்தரர்.

நட்டராகம்

ரூபகம்

பொடியார் மேனியனே புரிநூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளர்கங்கையின் மங்கையொடும்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகே ளென்னமுதே யெனக்கார்துணை நீயலதே.

பிறையா ருஞ்சடையாய் பிரமன்றலை யிற்பலிகொள்
மறையார் வானவனே மறையின்பொரு ளானவனே
கறையா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா வென்னமுதே யெனக்கார்துணை நீயலதே.

—சுந்தரர்

பூபாளம்

ஆதி

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளியொளி உதயத்து
ஒருப்படுகின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
யாவரும் அறிவரி யாய்எமக் கெளியாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே.

— மாணிக்கவாசகர்

ஆனந்த பைரவி

ஆதி

தந்ததுஉன் தன்னைக் கொண்டதுஎன் தன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
அந்தம்ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதுஒன்று என்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறைஉறை சிவனே
எந்தையே ஈசா உடல்இடம் கொண்டாய்
யான்இதற்கு இலன்ஓர் கைம்மாறே.

— மாணிக்கவாசகர்

சகாணு

ரூபகம்

அன்றே என்தன் ஆவியும்
 உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை
 ஆட்கொண்ட போதே கொண்டிலையோ
இன்றுஓர் இடையூறு எனக்குஉண்டோ
 எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
 நானோ இதற்கு நாயகமே.

— மாணிக்கவாசகர்

ரஞ்சனி

திரிபுடை

முத்தா போற்றி! முதல்வா போற்றி!
அத்தா போற்றி! அரனே போற்றி!
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி!
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி!
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி!
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி!
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி!
அளிபவர் உள்ளத் தமுதே போற்றி!
தென்னா டுடைய சிவனே போற்றி!
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!
போற்றி! போற்றி! புராண காரண
போற்றி! போற்றி! செய செய போற்றி!

— மாணிக்கவாசகர்

ஆரபி

நமச்சிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!
இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க!
கோகழியாண்ட குருமணிதன் தாள் வாழ்க!
ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள் வாழ்க!
ஏகன் அநேக னிறைவனடி வாழ்க!

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க!
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க!
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க!
கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க!
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க!

— மாணிக்கவாசகர்

மோகனம்

ஆதி

பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

— மாணிக்கவாசகர்

காம்போதி

ஆதி

உண்ணும்சோறு பருகுநீர்
　　தின்னும் வெற்றிலையு மெல்லாம்
கண்ணன் எம்பெரு மானென்றென்றே
　　கண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர்
　　வளம்மிக்கவ னூர்வினவித்
திண்ணம் என் இளமான்
　　புகுமூர் திருக்கோளூரே.

— நம்மாழ்வார்

சங்கராபரணம்

திரிபுடை

குலம்தரும் செல்வம் தந்திடும்
அடியார்படு துயராயின வெல்லாம்
நிலந்தரஞ்செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும்
பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்.

— திருமங்கையாழ்வார்

நீலாம்பரி

திரிபுடை

மன்னுபுகழ்க் கௌசலைதன்
மணிவயிறு வாய்த்தவனே!
தென்னிலங்கைக் கோன்முடிகள்
சிந்துவித்தாய்! செம்பொன்சேர்
கன்னிநன்மா மதிற்புடைசூழ்
கணபுரத்துஎன் கருமணியே!
என்னுடைய இன்னமுதே!
இராகவனே! தாலேலோ!

— குலசேகரப் பெருமாள்

ஆரபி

ஆதி

மாலே மணிவண்ணா மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண்டு இசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலின் இலையாய் அருளேலோர் எம்பாவாய்.

—ஆண்டாள்

பிலஹரி

அடதாளம்

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர் !
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

—ஆண்டாள்

செஞ்சுருட்டி

ஆதி

நாத விந்துக லாதீ நமோ நம
வேத மந்த்ரசொ ரூபா நமோ நம
ஞான பண்டித சாமீ நமோ நம வெகுகோடி
ஞான சம்புகு மாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோ நம
நாக பந்தம யூரா நமோ நம பரசூரர்
சேத தண்ட விநோதா நமோ நம
கீத கிண்கிணி பாதா நமோ நம
தீர சம்ப்ரம வீரா நமோ நம கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவ குஞ்சரி பாகா நமோ நம அருள்தாராய்.

-- அருணகிரிநாதர்

## சிம்மேந்திரமத்திமம்

ஆதி

அகரமு மாகி அதிபனு மாகி
அதிகமு மாகி –அகமாகி
அயனென வாகி அரியென வாகி
அரனென வாகி - அவர் மேலாய்
இகரமு மாகி எவைகளு மாகி
இனிமையு மாகி –வருவோனே
இருநில மீதில் எளியனும் வாழ
எனதுமுன் ஓடி – வர வேணும்.

—அருணகிரிநாதர்

நாட்டை

ஆதி

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவர்
கற்பக எனவினை கடிதேகும்

மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதி தீரா

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

—அருணகிரிநாதர்

மாயாமாளவகௌளை

ரூபகம்

பல்லவி

சிவலோக நாதனைக் கண்டு
சேவித் திடுவோம் வாரீர் (சிவ)

அனுபல்லவி

பவ பயங்களைப் போக்கி அவர்
பரம பதத்தைக் கொடுப்பா ரந்தச் (சிவ)

சரணம்

மானிட சன்மங் கொடுத்தார் தன்னை (சிவ)
வணங்கக் கரங்கள் அளித்தார்
தேனும் பாலும் போலே சென்று
தேரடியில் நின்று கொண்டு (சிவ)

— கோபாலகிருஷ்ண பாரதி

செஞ்சுருட்டி

ஆதி

பல்லவி

சிதம்பரம் போகாமல் இருப்பேனே
ஜென்மத்தை வீணைக் கழிப்பேனே (சிதம்)

சரணம்

பக்தியும் மனமும் பொருந்தின தங்கே
சத்தியம் சொன்னேன் சடலமும் இங்கே (சிதம்)

ஆசையும் நேசமும் ஆனந்த மங்கே
பேசலும் பாசமும் பிதற்றலும் இங்கே (சிதம்)

—கோபாலகிருஷ்ண பாரதி

சாமா

ஆதி

### பல்லவி

கனக சபைத் திருநடனம் கண்டு
களித்தானந்தம் அடைந்தோம் (கன)

### சரணம்

சனக சனந்தன ரிஷிகளும் கூட
    சதுர்முக தேவர்கள் தாளங்கள் போட
தில்லைமூ வாயிரம் பேர்கள் கொண்டாட
    தகிடத் தகிடத் தத்தோம் தத்தோம் என்று (கன

நந்தி ப்ருங்கிசிவ கணங்கள் கொண் டாட
    நாரத முனிவர்சங் கீதங்கள் பாட
பந்தி பந்தியாய் அந்தணர் முறைபோட
    பாலகோ பாலகிருஷ்ணன் மத்தளம் போட (கன)

—கோபாலகிருஷ்ண பாரதி

பியாக்

ஆதி

பல்லவி

ஆடும் சிதம்பரமோ ஐயன்கூத்
தாடும் சிதம்பரமோ (ஆடும்)

அனுபல்லவி

ஆடும் சிதம்பரம் அன்பர் களிக்கவே
நாடும் சிதம்பரம் நமச்சிவா யப்பொருள் (ஆடும்)

சரணம்

யாரு மறியாமல் அம்பல வாணனுர்
சீரடி யார்பார்க்கச் சேவடி தூக்கியே (ஆடும்)

பாலகிருஷ் ணன்போற்றும் பனிமதிச் சடையினுர்
தாளமத் தளம்போடத் தாதெய் தெய்என்று (ஆடும்)

— கோபாலகிருஷ்ண பாரதி

உசேனி

ரூபகம்

### பல்லவி

பக்திபண்ணிக் கொண்டிருந்தால் முத்திபெற லாமே
(பக்தி)

### அனுபல்லவி

எத்திசையும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
நிறைந்திருக்கும்
வஸ்துவென்று அம்பலவன் மலரடியைத்
தினந்தோறும் (பக்தி)

### சரணம்

பச்சைமரத் தாணிபோலப் பரிந்துமனம் நாடி
பாலகிருஷ்ணன் பணியும்பொன்அம்
பலவனைக்கொண்டாடி

இச்சைமொழி யும்புலன்கள் ஐந்துமிக வாடி
ஏகாந்த மான்பரி பூரணத்தைத் தேடி
அச்சமறந் திருந்திருவிழி ஆனந்தநீர் கரைபுரள
அரனே திரிபுரனே கங்காதரனே பராபரனே என்று
(பக்தி)

—கோபாலகிருஷ்ண பாரதி

காம்போதி

கண்டஜம்பை

ஒருமையுடன் நினது திரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்

பெருமைபெறும் நினது புகழ் பேசவேண்டும்; பொய்மை
பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும்; மதமானபேய்
பிடியா திருக்க வேண்டும்

மருவு மூவாசையை மறக்கவேவேண்டும்; உனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும்; நின்கருணை நிதிவேண்டும்; நோயற்ற
வாழ்வுநான் வாழ வேண்டும்

தருமமிகு சென்னையில் கந்த கோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே!
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே!

— இராமலிங்க சுவாமிகள்




சாரங்கா

ஜம்பை

அருட்ஜோதி தெய்வமெனை ஆண்டுகொண்ட தெய்வம்
அம்பலத்தே ஆடுகின்ற ஆனந்த தெய்வம்
பொருட்சாரு மறைகளெல்லாம் போற்றுகின்ற தெய்வம்
போதாந்த தெய்வமுயர் நாதாந்த தெய்வம்
இருட்பாடு நீக்கியொளி யீந்தருளும் தெய்வம்
எண்ணியநான் எண்ணியவா றெனக்கருளும் தெய்வம்
தெருட்பாட லுவந்தெனையுஞ் சிவமாக்கும் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

— இராமலிங்க சுவாமிகள்

ஆரபி

ஆதி

மாற்றறியாத செழும்பசும் பொன்னே
மாணிக்க மேசுடர் வண்ணக் கொழுந்தே
கூற்றறியாத பெருந்தவ ருள்ளக்
கோயி லிருந்த குணப்பெருங் குன்றே
வேற்றறி யாதசிற் றம்பலக் கனியே
வித்தையில் வல்லவர் மெச்சும் விருந்தே
சாற்றறி யாதவென் சாற்றும் களித்தாய்
தனிநட ராஜஎன் சற்குரு மணியே.

—இராமலிங்க சுவாமிகள்

## யதுகுல காம்போதி

ஆதி

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளுங் களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நடம் இடுகின்ற சிவமே
என்னரசே யான்புகலும் இசையுமணிந் தருளே.

—இராமலிங்க சுவாமிகள்

ஹிந்துஸ்தான் காபி

திஸ்ர ஏகம்

ஊதூது சங்கே ஊதூது சங்கே
ஊதூது சங்கே ஊதூது சங்கே

கைவிட மாட்டானென் றூதூது சங்கே
கனக சபையானென் றூதூது சங்கே
பொய்விடச் செய்தானென் றூதூது சங்கே
பூஜை பலித்ததென் றூதூது சங்கே
பொன்னடி தந்தானென் றூதூது சங்கே
பொன்னம் பலத்தானென் றூதூது சங்கே
இன்ன லறுத்தானென் றூதூது சங்கே
என்னுள் அமர்ந்தானென் றூதூது சங்கே.

—இராமலிங்க சுவாமிகள்

செஞ்சுருட்டி

ஆதி

பல்லவி

நல்ல மருந்திம் மருந்து—சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து (நல்ல)

சரணம்

அருள்வடி வான மருந்து—நம்முள்
அற்புதமாக அமர்ந்த மருந்து
இருளற ஓங்கு மருந்து—அன்பர்க்
கின்புரு வாகஇருந்த மருந்து (நல்ல)

சஞ்சலம் தீர்க்கு மருந்து—எங்குந்
தானேதா னாகித் தழைக்கு மருந்து
அஞ்சலென் றருளு மருந்து—சச்சி
தானந்த மாக அமர்ந்த மருந்து (நல்ல)

மாலயன் தேடு மருந்து—முன்ன
மார்க்கண்ட ரைக்காக்க வந்த மருந்து
காலனைச் சாய்த்த மருந்து—தேவர்
காணுங் கனவினுங் காணா மருந்து (நல்ல)

இராமலிங்க சுவாமிகள்

ஹிந்துஸ்தான் காபி

திஸ்ர ஏகம்

பல்லவி

ஆடிய பாதம் மன்றாடிய பாதம்
ஆடிய பாதம் நின்றாடிய பாதம்

சரணம்

பாடிய வேதங்கள் தேடிய பாதம்
பக்திசெய் பக்தர்க்குத் தித்திக்கும் பாதம்
நாடிய மாதவர் நேடிய பாதம்
நாதாந்த நாட்டுக்கு நாயக பாதம் (ஆடிய)

ஆருயிர்க் காதார மாகிய பாதம்
அண்ட பிண்டங்கள் அளிக்கின்ற பாதம்
சாருயிர்க் கின்பம் தருகின்ற பாதம்
சத்திய ஞான தயாநிதி பாதம் (ஆடிய)

— இராமலிங்கசுவாமிகள்

செஞ்சுருட்டி

ஆதி

விண்ணும் மண்ணுந்தனி யாளும் — எங்கள்
வீரை சக்திநின தருளே — என்றன்
கண்ணுங் கருத்துமெனக் கொண்டு — அன்பு
கசிந்து கசிந்துகசிந் துருகி — நான்
பண்ணும் பூசனைக ளெல்லாம் — வெறும்
பாலை வனத்திலிட்ட நீரோ? — உனக்
கெண்ணுஞ் சிந்தையொன் றிலையோ? — அறி
வில்லா தகிலமளிப் பாயோ?

தோளை வலியுடைய தாக்கி — உடற்
சோர்வும் பிணிபலவும் போக்கி — அரி
வாளைக் கொண்டுபிளந் தாலும் — கட்டு
மாறு வுடலுறுதி தந்து — சுடர்
நாளைக் கண்டதோர் மலர்போல் — ஒளி
நண்ணித் திகழுமுகந் தந்து — மத
வேளை வெல்லுமுறை கூறித் — தவ
மேன்மை கொடுத்தருளல் வேண்டும்.

— சுப்பிரமணிய பாரதி

மாண்ட்

ஆதி

பல்லவி

பகைவனுக் கருள்வாய்—நன்னெஞ்சே
பகைவனுக் கருள்வாய்

சரணம்

புகை நடுவினில் தீயிருப்பதைப்
பூமியிற் கண்டோமே—நன்னெஞ்சே
பூமியிற் கண்டோமே

பகை நடுவினில் அன்புரு வானநம்
பரமன் வாழ்கின்றான்—நன்னெஞ்சே
பரமன் வாழ்கின்றான் (பகைவனு)

சிப்பியிலே நல்ல முத்து விளைந்திடுஞ்
செய்தி யறியாயோ—நன்னெஞ்சே
குப்பையிலே மலர் கொஞ்சுங் குருக்கத்திக்
கொடி வளராதோ?—நன்னெஞ்சே (பகைவனு)

உள்ள நிறைவிலோர் கள்ளம் புகுந்திடில்
உள்ளம் நிறைவாமோ?—நன்னெஞ்சே
தெள்ளிய தேனிலோர் சிறிது நஞ்சையும்
சேர்த்தபின் தேனாமோ?—நன்னெஞ்சே (பகைவனு)

வாழ்வை நினைத்தபின் தாழ்வை நினைப்பது
வாழ்வுக்கு நேராமோ?—நன்னெஞ்சே
தாழ்வு பிறர்க்கெண்ணத் தானழிவானென்ற
சாத்திரங் கேளாயோ?—நன்னெஞ்சே (பகைவனு)

போருக்கு வந்தங் கெதிர்த்த கவுரவர்
போல வந்தானுமவன்—நன்னெஞ்சே
நேருக் கருச்சுனன் தேரிற் கசைகொண்டு
நின்றதுங் கண்ணனன்றோ?—நன்னெஞ்சே (பகைவனு)

தின்ன வரும்புலி தன்னையு மன்பொடு
சிந்தையிற் போற்றிடுவாய்—நன்னெஞ்சே
அன்னை பராசக்தி யவ்வுரு வாயினள்
அவளைக் கும்பிடுவாய்—நன்னெஞ்சே (பகைவனு)

—சுப்பிரமணிய பாரதி

**ஆனந்தபைரவி**

**ஆதி**

ஆத்தி சூடி இளம் பிறை யணிந்து
மோனத்திருக்கும் முழுவெண் மேனியான்
கரு நிறங் கொண்டு பாற் கடல் மிசைக் கிடப்போன்
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்
ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்
உருவகத் தாலே உணர்ந்துண ராது
பலவகை யாகப் பரவிடும் பரம் பொருள்
ஒன்றே அதனியல் ஒளியுறும் அறிவோம்
அதன்நிலை கண்டார் அல்லலை அகற்றினர்
அதன் அருள் வாழ்த்தி அமர வாழ்வு எய்துவோம்.

—சுப்பிரமணிய பாரதி



பூபாளம்

ஆதி

பொழுது புலர்ந்தது; யாம் செய்த தவத்தால்
புன்மை இருட்கணம் போயின யாவும்;
எழுபசும் பொற்சுடர் எங்கணும் பரவி
எழுந்து விளங்கியது அறிவெனும் இரவி;
தொழுதுனை வாழ்த்தி வணங்குதற் கிங்குன்
தொண்டர் பல்லாயிரர் சூழ்ந்து நிற்கின்றோம்;
விழிதுயில் கின்றனை இன்னுமெந் தாயே!
வியப்பிது காண்! பள்ளி எழுந்தருளாயே!

— சுப்பிரமணிய பாரதி

மத்யமாவதி

ஆதி

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!
வாழிய பாரத மணித்திரு நாடு!
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க!
நன்மைவந் தெய்துக! தீதெலாம் நலிக!
அறம் வளர்ந் திடுக! மறமடியுறுக!
ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றுஞ்
சீரிய முயற்சிகள் சிறந்துமிக் கோங்குக!
நந்தே யத்தினர் நாடொறும் உயர்க!
வந்தே மாதரம்! வந்தேமாதரம்!

—சுப்பிரமணியபாரதி

பிஹாக்

ஆதி

பல்லவி

வித்தை யருளும் அன்னையின்
விளங்கு கொடியைப் போற்றுவோம்
சத்தியத்தின் கொடியிது சேவைத்தியாகக் கொடியிது
(வித்தை)

சரணம்

அறம்வளர்க்க வந்தநல் அருளைக்காட்டும் கொடியிது
பரமஹம்ச தேவரின் பிரியமான கொடியிது
தமிழ்மணம் விரித்திடும் தாயின் பெருமைக்கொடியிது
அமிழ்தில் இனிய அன்பினால்
அணைத்து நாங்கள் வாழவே (வித்தை)

அண்ணன் தம்பி மார்களாய் அகமகிழ்ந்து கூடியே
திண்மை யறிவு ஞானமும் தெய்வபக்தி தன்னுடன்
அன்பு செய்து வாழுவோம்
ஆண்மையைப் பெருக்குவோம்
இன்ப மெய்தி யாவரும் இருக்க என்றும் நாடுவோம்
(வித்தை)

—ம. ப. பெரியசாமி

மத்யமாவதி

ஆதி

பல்லவி

ஜெய ஸ்ரீ ராமகிருஷ்ண தேவா
ஜெய ஜெய சற்குரு நாதா (ஜெய)

அனுபல்லவி

மயலால் மிடியுண்டு வாடும் குவலயம்
தயவால் உயிர்த் தோங்கத் தோன்றிய முகிலே (ஜெய)

சரணம்

சாந்தம் வடியும்உன் சந்நிதி வந்ததும்
சந்தேகம் சஞ்சலம் சாம்பராய்ப் போயின
காந்திச் சுடர்விடும் கருணை ரூபனே
கைகொடுத் தெங்களைக் கரையேற்றும் ஐயனே (ஜெய)

— ம. ப. பெரியசாமி

பிலஹரி

ஆதி

பல்லவி

உனையன்றித் துணைகாணேன் — ஸ்ரீ ராமகிருஷ்ணு
எனையாட் கொண்டருள் வாய் — தேவாதி தேவா

அனுபல்லவி

முனிவர்கள் போற்றிடும் மோனப் பெரு நிலையே
முழுமுதலே அன்பே முடிவிலா இன்பமே — உனை

சரணம்

சித்தமலம் தனைப்போக்கும் சற்குருவே சின்மயனே
சித்தியெலாம் தருகின்ற கற்பகமாம் புண்ணியனே
முத்தியெனும் நிலைஎய்த நித்தமும் பேரன்னையைப்போல்
பக்தியெனும் அமுதூட்டும் பரம ஹம்சனே — உனை

— ம. ப. பெரியசாமி

கல்யாணி

ஆதி

பல்லவி

அன்னை சாரதாமணி தேவி அருள்மிகு
அன்புருவாய் வந்த ஆதி நாராயணியே (அன்னை)

அனுபல்லவி

முன்னை யுலகம் ஈன்ற முதல்வியே தேவியே
இன்னல்கள் எம்மைவிட் டேகிட வந்தபேர் (அன்னை)

சரணம்

பரம னருள்வடி வான பராசக்தி
பயங்கர ரூபிணும் காளி பரமேஸ்வரி
அமரம தளித்திடும் அமுதுடனே பிறந்த
அமலையும் கலைமகள் ஆகிய தேவியும்
பகவான் ராமகிருஷ்ணன் பாதபங்கய மமர்
சகமேபணியும் சர்வசக்தியும் நீயேஎன் (அன்னை)

—ம. ப. பெரியசாமி

## வந்தனதாரணி

ஆதி

பல்லவி

சாரதியாய் வருவாயே கண்ணு
சமர்தனிலே இந்த ரதந்தன்னை நடத்திடும் (சாரதி)

அனுபல்லவி

பாரிதில் வாழ்க்கையே போரதில் ஐம்பொறிப்
பகைவர்களை வென்றே வகையுடனுளவே (சாரதி)

சரணம்

உள்ளமே குருக்ஷேத்ரம் உன்னருளே அஸ்த்ரம்
ஓங்கிய பகைவரை உறவென்று மயங்காமல்
வள்ளலே வென்றுநான் வாகைசூடவே எண்ணி
வந்துளே னிரங்குவாய் வரமிது தருவாய் (சாரதி)

—ம. ப. பெரியசாமி

மந்தாரி

ஆதி

பல்லவி

அன்பு செய்யும் வாழ்க்கையே
அரன்மகிழும் வாழ்க்கையாமே (அன்பு)

அனுபல்லவி

மன்னுயிர்கள் யாவுமே மகிழ்ந்திருக்க என்றுமே
தன்னல மறந்ததான தன்மைகொண்ட தூய்மையான
(அன்பு)

சரணம்

அமர வாழ்வளித்திடும் அமுதுடனே தோன்றிய
ஆலகாலம் உண்டருளும் ஐயருள்ளம் ஏற்றது
பிட்டு விற்கும் முதியவட்கும் பிரியமான கூலியாய்
மட்டிலாத மண்சுமந்த முக்கணற் குகந்ததாமே (அன்பு)

— ம. ப. பெரியசாமி

சுருட்டி

ஆதி

பல்லவி

அவரே கடவுளை அறிந்தவராவர்
அனைவரும் மதித்திடத் தகுந்தவராவர் (அவரே)

சரணம்

துன்பப் படுவோர் துயரம் சகியார்
துடிதுடித் தோடித் துணைசெயப் புகுவார்
இன்பம் தமக்கென எதையும் வேண்டார்
யாவரும் சுகப்படச் சேவைகள் பூண்டார் (அவரே)

பசியால் வாடின எவரையும் பார்த்து
பட்டினி தமக்கெனப் பரிதபித் தார்த்து
விசையாய் முடிந்ததை விருப்புடன் கொடுப்பார்
வீண்உப சாரம் விளம்புதல் விடுப்பார் (அவரே)

நோயால் வருந்திடும் யாரையும் கண்டு
நோன்பெனச் செய்வார் எல்லாத் தொண்டும்
தாயாம் எனவே தம்சுகம் எதையும்
தள்ளிவைத் தருகினில் தாமிருந் துதவும் (அவரே)

— நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை

## ஆனந்த பைரவி

ஆதி

இல்லாத காலமில்லை
    இருக்கின்ற பொருளொன்றில்லை
எண்ணாத எண்ணமெல்லாம்
    எண்ணியும் எட்டவில்லை

சொல்லாத வேதமெல்லாம்
    சொல்லியும் சொன்னதில்லை
சூட்டாத நாமமில்லை
    தோன்றாத உருவமில்லை

அல்லாவாய்ப் புத்தனாகி
    அரனரிப் பிரம்மனாகி
அருளுடைச் சமணர் தேவும்
    அன்புள்ள கிறிஸ்துவாகிக்

கல்லாத மனதிற் கூடக்
    காணும விருப்பாரந்தக்
கடவுளென் றுலகம் போற்றும்
    கருணையைக் கருத்தில் வைப்பாம்.

—நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை

காம்போதி

ஆதி

பல்லவி

இதய வெளியினிலே பொதுநடம் புரிகுவாய்
ஏகாம் பரனே சிவனே என் (இதய)

அனுபல்லவி

பதசாரி தோறும்உன் அதிர்சிலம் பொலிகேட்டுப்
பரமானந் தம்பெறுவேன் சிற்சபேசா என் (இதய)

சரணம்

எனதென் றகங்கரிக்கும் மனது பரிந்துவர
இருவினைக் கட்டுகள் இற்றுச் சுயேச்சைபெற
அனவர தமும்உன்னை நினைந்து கசிந்துருகி
அத்தாஉன் மலரடிப் பித்தனாய் வாழ்ந்திட (இதய)

ஹரஹர ஹரவென்றென் ஆர்வங்கள் கோஷிக்க
அன்புமகர வீணை தும்தும் என வாசிக்க
சிரசிலுன் பேரின்பம் சிலிர்த்து நடமாட
செந்தமிழ் வாணியுன் மந்திரப் பொருள்பாட (இதய)

—சுத்தானந்த பாரதி

சகாஞ

ஆதி

தூய்மையுறுக! தூய்மையுறுக!
வாய்மனயாக்கை தூய்மையுறுக!
மனத்தை அடக்குக! மாரனை வெல்க!
சினவெறி யொழிக! சீலம் போற்றுக!

எல்லா உயிர்க்கும் இனியன செய்க!
நல்லன நாடுக! நல்வினஞ் சேர்க!
அன்பே செய்மின்! அறவழி நடமின்!
இன்பமாகும் எல்லா உயிர்க்குமே!

—சுத்தானந்த பாரதி

காம்போதி

ஆதி

எத்தனை ஜன்மங்கள் வந்து பிறந்தாலும்
இந்திய மண்ணிடை வேண்டுவனே

சத்திய ஆர்வமும் நித்திய சேவையும்
சாகஸ வாழ்க்கையும் வேண்டுவனே
பித்தனாய் மாறியே தொண்டுகள் செய்திடும்
பெருமையாம் வாழ்க்கையை வேண்டுவனே

ஏழை எளியவர் எங்கள்நன் னாட்டிலே
என்றும் பசியாற வேண்டுவனே
கோழைக ளில்லாமல் வீரத் தொழில்செய்யும்
கூட்டமிந் நாட்டிலே வேண்டுவனே

தேசம் அழைத்திடின் பாசம் களைந்திடின்
தெய்விக நல்லருள் வேண்டுவனே
நீசம் அகன்றிட நீதி துலங்கிட
நேர்மையாய்த் தொண்டுக ளாற்றுவனே

முப்பது கோடிக்கும் நன்மைகள் செய்வதே
முக்தி நிலைஎன்று சாற்றுவனே
இப்பணி செய்வதில் எவ்வகைத் துயரமும்
ஏற்றிடு வேனிது சத்தியமே.

—சங்கு சுப்பிரமணியன்

சிந்து பைரவி

ஆதி

சொல்லுவம் வைஷ்ணவன் யாரெனக் கேளீர்
சோர்ந்தவர் பீடையை அறிவானே
எல்லோர்தம் துக்கத்தை எரிப்பவ னுயினும்
எள்ளளவும் கர்வம் அடையானே (சொ)

மன்னுயிர் மக்களை வந்தித்து நிற்பான்
மாசுறு நிந்தனை மொழியானே
சொன்மன முடலதில் சுத்தம தானவன்
சோதியுற் ருள்பெற்ற தாய்மாரே (சொ)

பாவப் பேராசை யற்றுப் பார்வை சமத்வமுற்றுப்
பரஸ்திரீயைத் தாயெனப் பணிவானே
நாவினுல் பொய்மொழி நவிலவும் மாட்டான்
நாளும் பிறர்செல்வம் தீண்டானே (சொ)

மாயையும் மோகமும் மாயும் அவன்பால்
மனத்தில் வைராக்கிய முறுவானே
ஓயாமல் ராமனை உள்ளம் நினைந்திட
உண்டு புண்ணியம் புனல் உடலதிலே (சொ)

காமமும் லோபமும் கபடமும் கோபமும்
கனவிலு மில்லாத கனவானே
பாமரர் பார்த்திடப் பற்பல தலைமுறை
பாவனம் அடைந்திடச் செய்வானே (சொ)

—சங்கு சுப்பிரமணியன்

## வலஜி

ஆதி

பல்லவி

கைவிட மாட்டான் கனகசபேசன் உனைக்
காத்திடு வான்கண்ணால் பார்த்திடு வான்நெஞ்சே

அனுபல்லவி

சைகை அறிந்தேன் அவர் செய்கையின் திறன்தனை
பொய்யகத் தோர்காணத் தெய்வ சபாநாதன் (கை

சரணம்

மானிடர் அறிவினில் ஊறிடும் பொய்கையில்
தானிவர் வசிப்பவர் ஆயினும் பொதுவினில்
நானிலத் தோர்காண நாட்டிய மாடிடும்
சானித்ய மூர்த்தியைத் தியானித்திருப்பாயானால்(கை)

— சிதம்பரம் நடராஜசுந்தரம் பிள்ளை

நீலாம்பரி

ஆதி

பல்லவி

நின்னை முச்சரித்த என்னைக் கைவிடலாமோ
இந்நாளும் செய்த பக்தி போமோ (நின்)

அனுபல்லவி

பொன்னே மணியேயென் புந்தியின் உள்விளக்கே
அன்னே ஐயனே அன்பே ஆருயிரே என்று (நின்)

சரணம்

வேறோர் கதியறியேன் வேறோர் பதியறியேன்
விந்தைசெய் பொற்பாதத்தை யன்றிஒன்று மறியேன்
பேராம் பெருமையாம்பேர் ஆனந்தமாம் பெருக்கும்
பெரியார் சிறியார் என்ற பேதமெண் ணுதிருக்கும் (நின்)

— தி. இலக்குமணப் பிள்ளை

சாவேரி

ஆதி

பல்லவி

முன்னம் ரக்ஷித்த ஈசன் இன்னம் ரக்ஷிக்கானோ
முறையவற் கில்லையோ உரைமனமே ஏமனமே
(முன்னம்)

அனுபல்லவி

சின்ன வயதுமுதல் அன்ன மளித்திடர்கள்
என்ன வரினுந்தானே உன்னைப்பெற்ற அன்னைபோல்
(முன்னம்)

சரணம்

அவனன்றி ஓரணுவும் அசையாதென்ற மொழியை
ஆராய்ந்து நீபார்க்க வில்லையோ இந்த
அவனியில் கோடிப்பேர் இருந்தாலும் மெய்யாக
அவனைப்போல் ஒருதுணை சொல்வையோ வீணாய்ப்
புவனத்தில் ஒருவர்மேல் கவனத்தை யொழிஅம்ப
லவனை யமனைஉதைத் தவனைச் சிவனைநினை (முன்னம்)

— தி. இலக்குமணப் பிள்ளை

ஹிந்துஸ்தான்

சதுஸ்ர ஏகம்

ஜனகணமன அதிநாயக ஜயஹே பாரத பாக்ய விதாதா
பஞ்ஜாப ஸிந்துகுஜராத மராடா த்ராவிட உத்கலவங்க
விந்த்ய ஹிமாசல யமுனா கங்கா உஜ்வல ஜலதி தரங்க
தபஸுப நாமே ஜாகே, தபஸுப ஆசிஷ மாகே,
காஹேதவ ஜயகாதா
ஜனகண மங்கள தாயக ஜயஹே பாரத பாக்யவிதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே ஜய ஜய ஜய ஜயஹே

— ரவீந்திரநாத் தாகூர்

கானடா

ஆதி

பல்லவி

கலைகளெல்லாம் அள்ளித் தருபவளே — இளம்
கன்னித்தமிழாய்த் திகழ்பவளே — நல்ல [கலை]

அனுபல்லவி

புலவரெல்லாம் புகழ் கலைமகளே — அன்பு
பொங்கித் ததும்பும் திருவுருவே — நல்ல [கலை]

சரணம்

வீணையைக் கையில்நீ எடுத்தாய் — தூய
வெள்ளைக் கலையைநீ உடுத்தாய்
வாணீ அமுதத் தேன்நீ எனக்கு
வற்றாக் கல்வி செல்வம் கொடுத்தாய் [கலை]

முகாரி

சாபு

பல்லவி

ராம நாமம் செய் ஜென்ம சாபல்யம் ஆமே
சுகம் பெற லாமே [ராம]

அனுபல்லவி

நேமத்துடனே ராம நாம முச்சரிப்பதால்
காமக் குரோத மத மாச்சர்யம் போமே
சுகம்பெறலாமே [ராம]

சரணம்

அச்சுத நாமம் அற்புத நாமம்
தியானம் செய்தால் தத்வஞான முண்டாமே
சுகம்பெறலாமே
ஆசைவலையில் சிக்கி மோசம் போகாதே நெஞ்சே
கேசவர் துதி செய்தால் கிலேசங்கள் போமே
சுகம்பெற லாமே [ராம]

## சரஸ்வதி

ஆதி

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே!
அன்பெனும் குடில்புகு அரசே!
அன்பெனும் வலைக்குள் படுபரம் பொருளே!
அன்பெனும் கரத்தமர் அமுதே!
அன்பெனும் கடற்குள் அடங்கிடும் கடலே!
அன்பெனும் உயிரொளி அறிவே!
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே!
அன்புருவாம் பரசிவமே!

சங்கராபரணம்

ஆதி

எல்லாம் ஏசுவே! எனக்கெல்லாம் ஏசுவே!
தொல்லை மிகும் இவ்வுலகில் சுகம் ஏசுவே !
ஆயனும் சகாயனும் நேயனும் உபாயனும்
நாயனும் எனக்கன்பான ஞான மணவாளனும்
தந்தை தாய் இனம் ஜனம் பந்துளோர் சிநேகிதர்
சந்தோஷ சகல யோக சம்பூரண பாக்யமும் [எல்]

உன்னை வணங்க வென்று கரங்கள்
இரண்டினைத் தந்து விட்டாய்
கண்ணை அளித்து விட்டாய் இயற்கைக்
காட்சியைக் கண்டிடவே

நாவைப் படைத்து விட்டாய் நாளும்உன்
நாமத்தைப் பாடிடவே நல்லவை கேட்டிடவே
செவிகள் நன்றாய் அமைத்து விட்டாய்
நல்லுடல் தந்துவிட்டாய் பிறர்க்கு நாளும்
உழைத்திடவே வல்லவனே உமக்கு எம்முடல்
ஆவியும் சொந்த மன்றோ

உன்னை வணங்கிடுவோம் என்றென்றும்
உன்பாதம் போற்றிடுவோம்
எம்மையும் காத்தருள்வாய் எம்முள்ளம்
ஏற்றுக் கொள்வாய் இறைவா !

செஞ்சுருட்டி

அன்பே சிவமாய் அணைப்பாள் நம்மை அன்னை பராசக்தி
ஆறுதல் கூறி அமுதம் பொழிவாள் அன்னை பராசக்தி
இப்புவி இன்பம் வேண்டாம் என்பாள் அன்னை பராசக்தி
ஈடில்லாத காட்சியளிப்பாள் அன்னை பராசக்தி
உயர்வு தாழ்வு ஒன்றும் பாராள் அன்னை பராசக்தி
ஊக்கம் இருந்தால் போதும் என்பாள் அன்னை பராசக்தி
எங்கும் நிறைந்த ஜோதியாய் இருப்பாள் அன்னை பராசக்தி
ஏகாக்ஷரமாய் எங்கும் நிற்பாள் அன்னை பராசக்தி
ஐங்கர நாதனை ஆதியில் தந்தாள் அன்னை பராசக்தி
ஒக்கவே பீடத்தில் அமர்வாள் எங்கள் அன்னை பராசக்தி
ஓம் என்றாலே ஓடியும் வருவாள் அன்னை பராசக்தி
ஔவை எனவே அவனியில் வந்தாள் அன்னை பராசக்தி
[அன்பே]

அருள் ஜோதியே! வழி காட்டிடு என்னை
அழைத்துமே ஐய சென்றிடு
இருள் சூழதே அப்பா எங்கு நான் செல்வேன்
இல்லம் தூரத்தில் ஆச்சுதே
மருளும் உற்றன என்றன் பாதங்கள்
மன்னவா அருள் செய்குவாய்
பொருள் பல இனிபார்க்க வேண்டிலேன்
போதும் இந்த அனுபவம். (1)

வழி எனக்கு நீ காட்டுக என
வந்தனை செய்தறிகிலேன்
விழி குறித்திட்ட படியிதுவரை
வேகமாய்ச் சென்ற பாவியேன்
வழி பயம் உண்டு ஆயினும் டம்பம்
வளர் திமிர் கொண்டு சென்றனன்
பழி மிகுந்த என்பழைய நாட்களை
பரமனே நீயும் மறப்பையோ? (2)

அகதியின் மீது ஆசி தந்திடு
அது இங்கு வழி காட்டிடும்
சகதி தன்னையும் சரளைக் கல்லையும்
சரமழையையும் தாண்டுவேன்
அகன்றிடும் இருள் அருணகாலத்தில்
அமரர் புன்னகை காணுவேன்
பகலைப் பார்த்திட ஆர்வமுற்றனன்
பரமனே வழி காட்டுவாய். (3)

வைஷ்ணவ ஜன தோ தேனே கஹியே
ஜே பீட பராயி ஜாணே ரே!
பர துக்கே உபகார கரே தோயே
மன அபிமான ந ஆணே ரே!

ஸகல லோக மா ஸஹுனே வந்தே
நிந்தா ந கரே கேனீ ரே!
வாசகாச மன நிஸ்சல ராகே
தன தன ஜனனீ தேனீ ரே!

ஸம த்ருஷ்டினே த்ருஷ்ணு த்யாகீ
பரஸ்திரீ ஜேனே மாதரே!
ஜிஹ்வா தகீ அஸத்ய ந போலே
பர தன நவ ஜாலே ஹாதரே!

மோஹ மாயா வ்யாபே நஹி ஜேனே
த்ருட வைராக்ய ஜேனு மன்மாம்ரே!
ராம நாம ஸீம் தாளீ லாகீ
ஸகல தீரத தேனு தன்மாம் ரே!

வண லோபீ னே கபட ரஹிதசே
காம க்ரோத நிவாய்யா ரே!
பணே நர ஸை யோ தேனும் தர்ஸன கரதாம்
குல ஏகோ தேர தார் யாம்ரே!

கானடா

திஸ்ரம்

சம்போ மகாதேவா சாம்ப சதாசிவா
சிற்சபா நாயகா ஸ்ரீஜகந் நாதா
கருணா சாகரா கனக சபேசா
கௌரீ சங்கரா கைலாச வாசா.

பூபாளம்

ஆதி

கிருஷ்ண ராம்ராம் கோவிந்தாஹரே
ராமகிருஷ்ண கோவிந்தா
நந்த நந்தன கோவிந்தா ஹரே
ராமகிருஷ்ண கோவிந்தா
நவநீத சோரா கோவிந்தா ஹரே
ராமகிருஷ்ண கோவிந்தா
வேணு விலோலா கோவிந்தா ஹரே
ராமகிருஷ்ண கோவிந்தா
விஜய கோபாலா கோவிந்தா
ராமகிருஷ்ண கோவிந்தா.

கிருஷ்ண ராம்ராம் கோவிந்த ஹரிஹரி
ராமகிருஷ்ணம் ஜகத்குரும்

ஹரே ராம்ராம் ஜெய சீதாராம்
ராமகிருஷ்ணம் ஜகத்குரும்

ஜெயராம் ஜெயஜெய ஜெய சீதாராம்
ராமகிருஷ்ணம் ஜகத்குரும்

ஜெனனீம் சாரதா தேவீம் ஜெயஜெய
ராமகிருஷ்ணம் ஜகத்குரும்

ஜெயஜெய தேவி ஜெக ஜனனீஜெய
ராமகிருஷ்ணம் ஜகத்குரும்.



யமுனா தீர விஹாரி பிருந்தாவன சஞ்சாரி
கோவர்த்தன தாரி கோபாலகிருஷ்ண முராரி.



அல்லா பரமபிதா ஹரிஹரி பிரும்மம்
அருள் புத்தனே சரணம்.



கோவிந்தா வரதா ஸ்ரீஹரி கோபாலா வரதா
பாண்டுரங்க வரதா ஸ்ரீஹரி பண்டரிபுர வரதா
கோவிந்த பிரம்மம் ஸ்ரீஹரி கோபால பிரம்மம்
பாண்டுரங்க பிரம்மம் ஸ்ரீஹரி பண்டரிபுர பிரம்மம்.

கிருஷ்ண ராம்ராம் கோவிந்த ஹரிஹரி
கிருஷ்ண ராம்ராம் கோவிந்த கேசவ
கிருஷ்ண ராம்ராம் கோவிந்த மாதவ
விஷ்ணு சதானந்த வேணுகோபால பால.

ராமராம ராமராம ராமநாம தாரகம்
ராமகிருஷ்ண வாசுதேவ பக்திமுக்தி தாயகம்
ஜானகி மனோகரம் சர்வலோக நாயகம்
சங்கராதி சேவ்யமான புண்யநாம கீர்த்தனம்.

ரகுபதி ராகவ ராஜாராம்
பதீத பாவன சீதாராம்
ஈசுவர அல்லா தேரேநாம்
சபகோ சன்மதி தேபகவான்
ராம ராமஜெய ராஜாராம்
ராம ராமஜெய சீதாராம்.

### தேஸ்

ராமச்சந்த்ர ரகுவீரா ராமச்சந்த்ர ரணதீரா
ராமச்சந்த்ர ரகுராமா ராமச்சந்த்ர பரந்தாமா
ராமச்சந்த்ர ரகுநாதா ராமச்சந்த்ர ஜகன்னாதா
ராமச்சந்த்ர மமபந்தோ ராமச்சந்த்ர தயஸிந்தோ.

திலங்

கிருஷ்ண கிருஷ்ண முகுந்தா ஜனார்த்தனா
கிருஷ்ண கோவிந்த நாராயணா ஹரே
அச்சுதானந்த கோவிந்த மாதவா
சச்சிதானந்த நாராயணா ஹரே.




செஞ்சுருட்டி

தேவகி நந்தன நந்த முகுந்தா
வந்தித முனிஜன நித்யானந்தா
நிகமோ தாரா நவநீத சோரா
கஜபதி வாகன ஜகதோ தாரா
மகர குண்டல தரமோகன வேஷா
ருக்மணி வல்லப பாண்டவ போஷா
சங்கு சக்ர ஸ்ரீஹரி கோவிந்தா
பங்கஜ லோசன பரமானந்தா.

**பாஹேஸ்வரி**

ஹேஜகத் ராதா விச்வ விதாதா
ஹேசுக சாந்தி நிகே தனுகே
பிரேமகே சிந்து தீனகே பந்து
துக்க தரித்ர வினசனகே
நித்திய அகண்ட அனந்த அனாதி
பூரண பிரம்ம சனாதனகே
ஜெக ஆஸ்த்ரய ஜகபதி ஜயவந்தன
அனுபவ அலங்க நிரஞ்சனகே
பிராணசகா திரிபுவன பரிபாலகா
ஜீவனுகே அவலம் பனுகே [ஹேஜகத் ராதா]

மோகனம்

ஆதி

யசோத நந்தன யதுகுல திலகா
யாதவ வம்சா மாம் பாஹி

இராதா லோலா ராஜீவா நேத்ரா
ரமணீய காந்தா மாம்பாஹி

கோபீ வல்லப கோகுல நாதா
கோவர்த்த னோத்தர மாம்பாஹி
கம்ஸா சேதன காளிங்க நர்த்தன
கருணா சாகர மாம்பாஹி
பாண்டவ மித்ரா பரம பவித்ரா
பங்கஜ நேத்ரா மாம்பாஹி
மாயா மாதவ மானசம் ரக்ஷண
மதுரா நாயக மாம்பாஹி.

ஹிந்தோளம்

சதுஸ்ரஏகம்

| | | | |
|---|---|---|---|
| தசரத | நந்தன | ராம் | ராம் |
| தசமுக | மர்த்தன | ராம் | ராம் |
| பசுபதி | ரஞ்சன | ராம் | ராம் |
| பாப | விமோசன | ராம் | ராம் |
| மணிமய | பூஷண | ராம் | ராம் |
| மஞ்சுள | பாஷண | ராம் | ராம் |
| ப்ராணபய | ரட்சக | ராம் | ராம் |
| ராட்ச | தாடக | ராம் | ராம். |

ஹிந்தோளம்

ஓம் தத்ஸத் ஸ்ரீநா ராயண நீ
புரு ஷோத்தம குரு நீ
சித்தபுத்த நீ ஸ்கந்த விநயக
சவிதா பாவக நீ
ப்ரம்ம மத்யநீ யஹ்வ சக்தி நீ
ஏசு பிதா பிரபு நீ
ருத்திரா விஷ்ணு நீ இராமகிருஷ்ண நீ
ரஹீ மதாவோ நீ
வாசு தேவ கோவிச்வரூப நீ
சிதா நந்த ஹரி நீ
அத்வி தியநீ அகால நிர்பய
ஆத்ம லிங்க சிவநீ.

ராமகிருஷ்ண ஹரே ஹரே ஜெய் ஜெய்
ராமகிருஷ்ண ஹரே
அயோத்ய வாசா ராம நமோ
கோகுல வாசா கிருஷ்ண நமோ [ஜெய்]
தசரத நந்தன ராம நமோ
வசுதேவ நந்தன கிருஷ்ண நமோ [ஜெய்]
சீதா காந்தா ராம நமோ
ராதா காந்தா கிருஷ்ண நமோ [ஜெய்]
ராம நமோ சீதாராம நமோ
கிருஷ்ண நமோ ராதா கிருஷ்ண நமோ [ஜெய்]

# பாடல் முதற் குறிப்பு

( எண் - பக்க எண் )

93:

| OUR PUBLICATIONS | | Rs. P. |
|---|---|---|
| 1. Meaning of Home Science –Dr. Rajammal P. Devadas | ... | 2 00 |
| 2. Why Study Home Science ... | ... | 0 50 |
| 3. Planning The Requirements for Teaching HOME SCIENCE (In Higher Secondary Schools) ... ... | ... | 2 00 |
| 4. Organising THE HOME SCIENCE Syllabus for Higher Secondary School into units | ... | 2 00 |
| 5. Requirements for Teaching HOME SCIENCE in colleges ... ... | ... | 1 50 |
| 6. Educational Philosophy of Swami Vivekananda | ... | 9 00 |
| 7. Impact of Higher Education on the Pattern of Family Life ... ... | ... | 1 50 |
| 8. A Socio-Economic Survey in Masakalipalayam Village (1964) | ... | 0 50 |
| 9. A Socio-Economic Survey in Telungupalayam Village (1965) | ... | 0 75 |
| 10. A study of the efficacy and economy of Hay Box-an improved Fireless Cooker by R. P. Davadas & Pushpa V. | ... | 1 00 |
| 11. Report of a Seminar on Part Time Employment of Women | ... | 1 50 |
| 12. The Prospectus of Sri Avinashilingam Home Science College ... | ... | 1 00 |
| 13. Sri Avinashilingam Education Trust Institutions | ... | 0 25 |
| 14. Journal of Nutrition and Dietetics–Quarterly : Annual Subscription | ... | 24 00 |
| 15. மனையியல் மாண்பு ... ... —திருமதி ராஜம்மாள் தேவதாஸ் | ... | 1 50 |
| 16. மனையியல் கற்பது ஏன்? | ... | 0 25 |
| 17. சுவாமி விவேகானந்தர் சரித்திரம் | ... | 0 50 |

“ தூய்மையுறுக! தூய்மையுறுக!
வாய்மனயாக்கை தூய்மையுறுக!
மனத்தை அடக்குக! மாரனை வெல்க!
சினவெறி யொழிக! சீலம் போற்றுக!

எல்லா உயிர்க்கும் இனியன செய்க!
நல்லன நாடுக! நல்லினஞ் சேர்க!
அன்பே செய்மின்! அறவழி நடமின்!
இன்பமாகும் எல்லா உயிர்க்குமே!”

